

போக முனிவர்

அருளிய

# வீட்டு வைத்தியம்

(இரண்டாம் பாகம்)



தொகுத்தவர் :

## K. B. சீனிவாசன்



பதிப்பாளர்

**K. A. மதுரை முதலியார்**

ஷண்முகானந்த புத்தகசாலை,

48, நைனியப்ப நாய்க்கன் தெரு

பார்க்டவுன், சென்னை-3

பதிப்புரிமை] 1966 Rs. 3-00

## முகவுரை

---

நம் தமிழ் நாட்டில் தமிழ் வைத்தியம் பரவாமல் இருப்பதற்கு தமிழ் வைத்தியத்தைக் குறித்து எல்லோருக்கும் புரியும்படி தமிழ் வைத்திய நூல்களை அச்சிட்டு விளம்பரம் செய்யாததே முக்கிய காரணம் எனலாம். மேலும் தனக்குத் தெரிந்ததை மற்றவர்களுக்கு விபரமாக எடுத்து கூறினால் வைத்தியம் பலிக்காது என்று மூட கொள்கையின் காரணமாக பல வைத்தியர்கள் மூடி மறைத்து ரகசியமாக வைத்திருந்தார்கள். பழைய தமிழ் வைத்திய நூல்களெல்லாம் மக்களுக்கு புரியாமல் பரிபால பாஷையில் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. சித்தர்கள் நம் நாட்டுப் பேரறிஞர்கள் நமது முன்னோர்கள் அவர்கள் துருவி ஆராய்ந்து கண்டு பிடித்து கையாண்டு கொடுத்துப் போன செல்வமே சித்த வைத்தியமாகும் தமிழ் நாட்டு வைத்தியமும் தமிழ் நாட்டு வைத்தியத்தொழிலும் முற்போக்கடைய வேண்டுமானால் பழைய வைத்திய நூல்களையும், வைத்திய ஓலைச்சுவடிகளையும் சர்க்கார் கைபற்றி சர்க்கார் ஆதரவில் எளிய நடையில் விளக்கமாக எழுதி அச்சிட்டு குறைந்த விலையில் மக்களிடம் விற்பனை செய்ய வேண்டுமென்று நாம் கேட்டுக் கொள்ளுகிறோம். அதற்குரிய முதற்படியும் சிறுபணியுமே இந்நூல்.

இங்ஙனம் :

**K. B. சீனிவாசன்**

உ

கணபதி துணை.

போக முனிவர் அருளிய

# வீட்டுவைத்தியம்

## (இரண்டாம் பாகம்)

---

### தாதுபுஷ்டி சூரணம்

பிஞ்சு கடுக்காயை யீனு தபசுவின் மூத்திரத்தில் ஊறவைத்து மறுதினம் வடித்து மறுபடியும் பசுங்கன்றின் நீர்விட்டு அவித்து வெண்ணீரில் சுத்தம் செய்து உலர்த்தி சரியிடை பஞ்சாப்சாலாமிஸ்ரி சேர்த்து சூரணம்செய்து காலை மாலை ¼ தோலா எடை பசுவின்பாலில் கலந்து சாப்பிட்டுவரின் தாதுபுஷ்டி யுண்டாகும் சூடு தணியும், தேகம் பெருக்கும் இது ஓர் அருமையான பக்குவம்.

### கண் வியாதிகளுக்கு ஓர் தைலம்

1-பலம் துப்பை பூ ¼ சேர் நல்லெண்ணெய் இவை இரண்டையும் கலந்து வெய்யலில் நாற்பதுநாள் வைத்து எண்ணெயை வடித்து வைத்துககொண்டு கண்களில் ஒருதுளி வீதம் விட்டுக் கொண்டுவந்தால்சகலவித நேத்திரவியாதிகளும் குணமாகும். கபால ஜன்னியும் போகும்,

### பயித்தியம் தீர

1 படி எலுமிச்சம்சாறு 1 படி நல்லெண்ணை நத்தச்சூரிவேர் 1 பலம் இதை பசுவின்பால் விட்

பிலி, செவ்வியம், வாய்விளங்கம், கருஞ்சீரகம் அரத்தை கஸ்தூரி மஞ்சள், கொச்சிப்பட்டை இவை வகைக்குப்பலம் ஒன்று இவைகளை ஆட்டுப்பால் விட்டரைத்துமெழுகுபதமாய்க்காய்ச்சி எண்ணெயை வடித்து நாலுநாளைக்கொருமுறை காலையில் தேய்த்து தலைமுழுகிவரின் பித்தமேக நீர் சிரசிற்கேறி அதனுல் உண்டாகும் நீர்பீனிசம் குணமாகும், இந்த நீர்ப்பீனிசம் முற்றிஞல் சுவாசக்ஷயமாகும்,

### குழந்தை வயிற்றில் மரித்திருந்தால்

சரக்கொன்றை காயின்மேல் ஓட்டை பொடித்து சரிஎடை குங்குமப்பூவும் சீனைகற்கண்டும சேர்த்து பன்னீர் விட்டரைத்து சுண்டைக்காயளவு கொடுத்தால் பிரசூதிகாவாயுவை தூண்டி சீக்கிரம் பிரசவமாகும். குழந்தை வயிற்றில் மரித்திருந்தாலும் வெளிப்படுத்தி விடும்,

### நேத்திரகாசத்திற்கு

சிறுகீரை சமூலத்தை சமையல்செய்துசாப்பிட்டால் நேத்திரகாசம், அஸ்திச்சூடு, மேகச்சூடு, கிரிச்சரரோய் இவை குணமாகும்,

### இருமலுக்கு வேறுமுறை

முசுமூசுக்கை, கண்டங்கத்திரி, தூதுவளை, வெள்ளைப்பூவுள்ள இண்டிஇலை சிறுகாஞ்சோரி இன்பூரல்வோ திப்பிலி மிளகுசீரகம் இவைகளை இடித்து சமஎடை சூரணம்எடுத்து இதற்குசம எடை சர்க்கரை கலந்து சிறிது பசு நெய்யும்



தேனும் சேர்த்து சுண்டைக்காயளவு காலை மாலை சாப்பிட்டு வந்தால் இருமல், கபம், காசம் இவைகள் குணமாகும்.

### தாதுபுஷ்டி யுண்டாக

நெல்லிவத்தல் பேரீச்சம்பழம் திராக்ஷைப் பழம் சீனைகற்கண்டு இவைகளை நெய் விட்டரைத்து சுணடைக்காயளவு காலையில் சாப்பிட்டு வந்தால் சூடு தணிந்துதாதுபுஷ்டி உண்டாகும்

### நீர்எரிவு நீங்க

தேற்றுங் கொட்டையை வறுத்திடித்துக் காப்பிக்கொட்டைக்குபதிலாக உபயோகித்தால் மேக வெட்டை, உடசூடு, நீர்எரிவு, முதலியன போகும்.

### தேக உஷ்ணத்திற்கு

கோவைஇலையை புளியில்லாமல் சமையல் செய்து உபயோகித்து வந்தால் சீர்க்கட்டு இருமல் அஸ்திச்சூடு தேகஉஷ்ணம் இவை குணமாகும்,

### கிராணி கழிச்சலுக்கு

இலவம்பிசின், அதிவிடயம், ஜாதிக்காய், ஜாதிபத்ரி, காசிக்கட்டி, கிராம்பு, அபின்குரோசாணி ஓமம நீர்முள்ளிவிதைஇவைகள் வகைக்கு 1-விராகனிடை வில்வப்பழம் ஐந்து விராகனிடை இவைகளை ஒன்றுசேர்த்து இடித்துவடிகட்டி ஊமத்தையிலைசாற்றில் ஆறுமணிநேரம் நன்ருய் அரைத்து மிளகு பிரமாணம் மாத்தி

ரைகளாக உருட்டி உலர்த்திக்கொண்டு காலை மாலை ஒரு மாத்திரை நெய் அல்லது தேன் அல்லது வில்வவேர் கஷாயம் விட்டிழைத்து கொடுக்க எந்தமருந்தாலும் தீரா தகிராணிக்கழிச்சல் சீதஇரத்தபேதியும குணமாகும்,

### தலைவலிக்கு நசியம்

இலுப்பை புண்ணுக்கை சிவந்த பதத்தில் சுட்டு ஒருபலம் எடுத்துஅதில் கால்பலம் எருக்கம்பால விட்டரைத்து உலர்த்தி சுண்டைக்காய் வேர் தும்பைவேர் வகைக்கு ¼ பலம் சேர்த்திடித்து வஸ்திரகாயம் செய்து கல்கார்க்கடைத்த சீசாவில்அடைத்துவைத்துதலைநோய், ஒற்றைத் தலைவலி ஜன்னி மயக்கங்களுக்கும் மண்டைகுத்தலுக்கும்சிறிதுஎடுத்துபொடிபோடுவது போல் போடவும்.

### இரத்த மூலத்திற்கு

நெய்தல் கிழங்கை உலர்த்தி இடித்தமாவு ஒரு விராகனிடை வீதம்சேவித்து வந்தால் இரத்தமூலம் இரத்தகிராணி குண மாகும் கிழங்கை இழைத்துத் தடவினல்அக்கிரணம் ஆறிஉலரும்

### மேககிரந்திக்கு

கருடன்கிழங்கை சீவி எடுத்து ஆமணக்கெண்ணெயில் காய்ச்சி துட்டு எடை வீதம் சேவித்து வந்தால் மேககிரந்தி நோய் குணமாகும்.



### கபஇருமலுக்கு

குண்டுமணி இலையை உலர்த்தி இடித்து வஸ்திரகாயம் செய்த தூளை சர்க்கரையுடன் கலந்து அரை விராகனிடை சாப்பிட்டு வந்தால் கபம் கோழை இருமல் குணமாகும்,

### பஸ்பம்

அயப்பொடி ஒருபலம் கெந்தகம் ஒருபலம் வீரம் ¼ பலம் இம்மூன்றையும் பழச்சாற்றினில் பனிரெண்டுசாமம் அரைத்துவடைபோல்தட்டி தெரிக்க காயவைத்து அகல்மூடி பத்து வரட்டியில் புடமிட்டு எடுத்து நாலுசாமம் அரைத்து நெல்லிடைவீதம் தேனில் திரிகடுகு சூரணத்தில் உண்டுவந்தால்பித்தவாயு, குன்மம், அன்னத்துவேஷம் பித்தவெட்டை, பாண்டு, சோகை, காமாலை, குடல்வாயு முதலியவை நிவர்த்தியாகும், இது அனுபவமுறை,

### பித்தசுரத்திற்கு கஷாயம்

ஏலம், பாதிரிவேர், சிறுகாஞ்சொரிவேர்; விலாமிச்சவேர், நன்னரிவேர், அதிமதுரம், கோஷ்டம், சீரகம், மல்லி சுக்கு, நெல்லிமுள்ளி, பேரீச்சங்காய் திராட்சை இவைகளை ஒரே அளவாய் இடித்து கஷாயம் செய்து காலை மாலை அரைக்கால்சேர் வீதம் சீனிசேர்த்து கொடுத்து வந்தால் வாந்தி மயக்கம் பிதற்றல பித்தசுரம் இவை நிவர்த்தியாகும்.

## வெள்ளை வெட்டை வியாதிகளுக்கு

வால்மிளகு மாசிக்காய் ஏலரிசி காசுக்கட்டி மூங்கிலுப்பு இவைகளை இடித்து வஸ்திரகாயம் செய்து சந்தன அத்தரைவிட்டு 4-மணி நேரம் கல்வத்திலரைத்து காலை மாலை சுண்டக்காய் அளவு சாப்பிட்டுவரின் புதிதாயுண்டான நீர் எரிவு வெள்ளைவெட்டை வியாதிகள் தீரும்,

## அதிமூத்திர வியாதிக்கு

நாவற் கொட்டையை வருத்து இடித்து தூள்செய்து வைத்துக்கொண்டு காபி பவுடருக்குபதில் ஷெ தூளை உபயோகித்தால் அதி மூத்திரநோய் குணமாகும,

## நீர்கடுப்புக்கு பஸ்பம்

கற்பூர சிலாசத்து ஒரு பலம் வாங்கி சுண்ணும்பு தெளிவு நீரில் ஊரப்போட்டு மறுநாள் எடுத்து மருதாணி இலை அரைத்த விழுதுக்குள் வைத்துமூடி சீலைமண் செய்து பத்து வருட்டியில் புடமிட்டு எடுத்து பஸ்பம்போல் கல்வத்திலரைத்து பணஎடை அளவு வெண்ணெயில் உண்டுவர வெட்டைச்சூடு, நீர்கடுப்பு, நீர்எரிவு, அஸ்திச்சூடு முதலியதும் குணமாகும்.

## வயிற்றுவலிக்கு பஸ்பம்

சோத்துப்பு, சோடா உப்பு, சீனிக்காரம், வெடியுப்பு இந்துப்பு இவைகளை சமஎடை குப்பைமேனிச்சாற்றாலும் மாற்றி அரைத்து பத்து தடவை கோழிப்புடமிட்டால் பஸ்பமாகிவிடும்



5 நெல்லிடை வீதம் தினம் இருவேளை வாயில் போட்டு தண்ணீர் அருந்த நாட்பட்ட வயிற்று வலி குணமாகும்,

## வெட்டை சூட்டிற்கு பஸ்பம்

1 பலம் படிகாரத்தை ஓட்டிவிட்டு பொரித்து உத்தாமணிச் சாறு விட்டு ௪-நாளரைத்து பில்லைசெய்து உலர்த்தி அகலில் மூடி சீலைமண் செய்து 10-விருட்டியில் புடமிட்டு எடுத்து 4-மணி நேரம் அரைத்து 1-நெல் இடைவீதம் வெண்ணெயில் சாப்பிட்டு வந்தால் வெட்டைச்சூடு குணமாகும்,

வேப்பந்துளிரை சாப்பிட்டு பழகிவந்தால் எவ்வித வியாதிகளும் நிவர்த்தியாகும். வியாதி அண்டாது,

## சகலவித இரணங்களுக்கு

கொடிவேலிவேர் கற்பூரம் ரசகற்பூரம் இம்மூன்றையும் சம எடை அரைத்து எள்ளெண்ணெயில் சேர்த்து காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு மேகப்புண் இன்னும் சகலவித ரணங்களுக்கும் போடலாம் ரணங்கள் ஆறி உலர்ந்துவிடும்.

## குடல் நோய்களுக்கு

சோம்பு சூரணத்துடன் சர்க்கரை கலந்து சாப்பிட்டுவந்தால் அஜீரணம் முதலிய குடல் வியாதிகள் நிவர்த்தியாகும்.

### பிரசவமாவதற்கு

சவ்வாது குங்குமப்பூவும் அரிசி எடை சேர்த்து கோழிசூப்பில் கலந்து கொடுத்தால் பிரசவவலி துரிதமாகி பிரசவமாகும்,

### சொறி சிரங்குகளுக்கு

நீரடி முத்தின்பருப்பை புளித்த மோர்விட்டரைத்து பூசினல் சொறிசிரங்கு குணமாகும்.

### பித்தவாத சுரத்திற்கு கஷாயம்

சிந்திற்கொடி, கோரைக்கிழங்கு, சுக்கு பற்பாடகம் சிறுகாஞ்சொரிவேர், நிலவேம்பு இவைகளை இடித்துக் கஷாயம் செய்து கொடுத்துவந்தால் பித்தவாத தொந்தசுரம் குணமாகும்.

### வெள்ளை வெட்டைக்கு

பொரித்தபடிகாரம், நெல்லிமுள்ளி, சீனுக்கற்கண்டு மூன்றும் சரிஎடை பொடித்து வடிகட்டி திரிகடி பிரமாணம் காலை மாலை பசுமோருடன் கலந்துசாப்பிட்டு வந்தால்தீராதவெள்ளை வெட்டை நோய்கள் தீரும்.

### சூலைநோய் தீர

ஆளிவிதை கால்பலம்வாங்கி தண்ணீர்விட்டரைத்து வெல்லம் சேர்த்து களிபோல்செய்து அரைரூபாய் எடை காலை மாலை ஏழுநாட்கள் சேவித்தால் சூலைநோய் குணமாகும்,

### கற்பசூலை நோய்களுக்கு

புன்னை இலையும் வெங்காயமும் வகைக்கு



பலம்ஒன்று எடுத்துஅரிந்து தூள்செய்து ஒரு சேர் ஆமணக்கெண்ணையில் போட்டுக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு காலணாஎடைவீதம் சாப்பிட்டு வந்தால் கெற்பசூலை, சந்து வாதம் யோனிச்சூலை, வெட்டைச்சூடு, கைகால் குத்தல் நீர்ச்சுருக்கு, வெட்டைவாயு, கண்எரிவு முதலியதும் குணமாகும்.

### பேதியாவதற்கு

துண்டுதுண்டாக வெட்டி இளம் வறுப்பாக வறுத்த வசம்பு விராகனிடை எட்டு சுத்திசெய்து வறுத்தவாளம் ஒரு விராகனிடையும் சேர்த்து எலுமிச்சபழசாற்றில்அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்துஉலர்த்தி ஒருமாத்திரை சாப்பிட்டு மேலே வெந்நீர் 2, 3 தடவை பேதியாகும்.

### எலும்புருக்கி வியாதிக்கு

¼-படி மாதுளம்பூ சாறு ஒரு சேர் பசுவின் நெய் சேர்த்துக் காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு விராகனிடை வீதம் சேவித்தால், எலும்புருக்கி அஸ்திச்சூடு கணைச்சூடு மூலச்சூடு இவைகள் நிவர்த்தியாகும்.

### வயிறு உப்பிசம் நீங்க

யானைதிப்பிலியை இளம் வருப்பாக வருத்திடித்து வஸ்திரகாயம் செய்து இரண்டு நெல் எடைவீதம் தேனில் சாப்பிட்டு வந்தால் வயிறு உப்பிசம ஈளை அஜீர்ணம் இவை குணமாகும்.

## விடாத தலைவலிக்கு

நொச்சிசாறு நல்லெண்ணை இவை வகைக் குப்படி ஒன்று வெள்ளைப்பூண்டு 1 பலம் நசுக்கி போட்டு சாறு சுண்டும்வரை காய்ச்சி எடுத்து நாலு தினத்திற் கொருமுறை அதிகாலையில் தேய்த்து வெந்நீரில் ஸ்நானம செய்து வந்தால் விடாத தலைவலி பீனிசம் குணமாகும்.

## புத்திர சந்தானம் உண்டாக

சதகுப்பை, கருஞ்சீரகம், எள், மரமஞ்சள் இவைகளை சரிஎடை இடித்து வஸ்திரகாயம் செய்து சரிபாகம் வெலலம சேர்த்து இடித்து கழற்சிக்காயளவு சாப்பிட்டு வந்தால் ஸ்திரீகள் சரியானபடி மாத முழுக்கில்லாமல் தேகம் பருத் துத் திமிர்த்துப் போய் மகப்பேறின்றி யிருக் கும் சூதகபந்த மலட்டு நோய் நீங்கி கெற்பாச யம் சுத்தப்பட்டு சந்தான உற்பத்தியும் உண் டாகும்.

## காச இருமலுக்கு

கண்டங்கத்திரியிலையும் திப்பிலியும் உலர்த் திடித்து வஸ்திரகாயம செய்து தம்படி அளவு வீதம் தேனில்குழைத்து சாப்பிட்டால் காசம், ஈளை கப இருமல் குணமாகும்,

## எலிக்கடி விஷம்நீங்க

நிலவாகை சமூலத்தை உலர்த்திடித்து வஸ திரகாயம் செய்து பேய்ச்சுரையின் குடுக்கை யில் அடைத்து வைத்துக்கொண்டு அரை ரூபா



எடை ஆமணக்கெண்ணெயில் குழைத்து குழைத்து கொடுக்க எலிக்கடி விஷம் நீங்கும்.

## கெற்பமுண்டாவதற்கு

விழுதிவேர் பலம் 2 இடித்து 1 படி தண் ணீரில் போட்டு அரைக்கால் படியாகக் காய்ச்சி வடிகட்டி ஸ்திரீகள் வீட்டுக்கு விலக்க நாட்க ளில் கொடுத்தால் மலட்டுக் கிருமிகள் மடிந்து வெளிப்பட்டு கெற்பமுண்டாகும்,

## பித்த மயக்கத்திற்கு

½-படி ஆமணக்கெண்ணை எலுமிச்சம் பழ சாறு சோற்றுக் கற்றாழைசாறு இவை வகைக் கு ½ படி சேர்த்து ஒரு பலம் கடுக்காய்த்தோலை அரைத்து போட்டு காய்ச்சி மெழுகு பதத்தில் எண்ணையை வடித்து காலைதோறும் ஒரு ரூபா எடை சாப்பிட பித்தமயக்கம் கைகால் எரிவு கள் தேகக்காந்தல் குணமாகும்.

## நாள்பட்ட சுரத்திற்கு

சுக்கு, கிராம்பு, திப்பிலி, சந்தனத்தூள், கடுக்காய், நிலவேம்பு, வேப்பம்பட்டை, சீந்தில் கொடி கடுகுரோகினி வெள்ளெறுக்கு விஷ்ணு கிராந்தி துளசி இவைகளை இடித்து கஷாயம் செய்து காலைமாலைகால்சேர்வீதம் சாப்பிட்டால் நாள்பட்ட சுரம்நீங்கும்,

## தலைமயிர் உதிராமலிருப்பதற்கு

முற்றிய தேங்காய்களை கண்திறந்து தண் ணீரைஊற்றிவிட்டு அவைநிரம்ப கருப்பு பூலாம்

பழத்தை நிரப்பி ஷி கட்டையில் அடைத்து மூடி தண்ணீர் நைப்புள்ள பூமியில் பதினைந்து நாள் புதைத்து வைத்திருந்து எடுத்தால் அதிலுள்ள தேங்காயும் பழமும் அழுகி இருக்கும், அதைஅரைத்து பீங்கான் பாத்திரத்தில்எடுத்து வெய்யிலில் வைத்து ஷி எண்ணெயைப்பிழிந்து தலைக்குத்தடவி வந்தால் தலைமயிர் உதிர்வதும் செம்பட்டையும் நீங்கும், கூந்தல்கருத்தடர்ந்து வளரும்,

மார் எரிச்சலுக்கு

1/2-படிநெல்லிக்காய்சாறு 1/2-படிகரும்பு சாறு 1/2-படிபசுவின் நெய் இம்மூன்றையும் ¼ சேர் கடுக்காய்ச் சூரணத்துடன் கலந்து காய்ச்சி சாறுகள் சுண்ட நெய்யை வடித்து ஒருதோலா வீதம் சாப்பிட்டுவந்தால் வயிற்றுஎரிவு (எரிகுன்மம்) கைகால்எரிவு மார்புஎரிவு முதலிய யாவும் குணமாகும், பத்தியமில்லை,

குழந்தைகளின் இரத்த வாந்திக்கு

குளிர்ந்த ஜலத்தில் (ஐஸ்தண்ணீர்) சுத்தமான துணியை நனைந்து மார்பின்பேரில் வைத்தால் வாந்திகுணமாகும். இது அனுபவம்.

குழந்தைகளின் வாந்திக்கு

கம்மார்வெற்றிலை ஒன்றைஎடுத்து அதில் லேசாக சுண்ணும்பைத்தடவி தம்படி மிளகில் பாதிஎடுத்து ஷி வெற்றிலையில்வைத்துசுருட்டி அடுப்பில் சட்டியை வைத்து வெற்றிலையை



போட்டு கருக்கி ஆழாக்கு ஜலம் விட்டு இரக்கி வடிகட்டி ஒருபாலாடை கொடுத்தால் வாந்தி குணமாகும் கைகண்டமருந்து,

நரம்பிழுப்பிற்கு

கலியாண்முருக்கம் பட்டையை தண்ணீர் விடாமல் அரைத்து கால்பெருவிரலில் கட்டினால்நரம்பிழுப்பு கெண்டையேறுதல் குணமாகும்,

வெள்ளை கொருக்கு யோனி புத்திற்கு

ஆழாக்கு பிரம்மதண்டுஇலைச்சாறு ஆழாக்குசித்தாமணக்குஎண்ணெ ஒருபலம் வெந்தியம் சீரகம் 1-பலம் ஓமம் 1-பலம் இடித்து ஷிசாற்றில் போட்டு கொதிக்கவைத்து கொதிக்கும் பொழுது ஆமணக்கெண்ணெயை ஊற்றி சாறு சுண்டிய பிறகு இரக்கிவடித்து பொட்டுக்கரண்டியளவுசாப்பிட்டுவந்தால் வெள்ளை, கொருக்கு யோனிப்புத்து குணமாகும். பத்தியம்சுட்டபுளி வருத்தஉப்பு, தாளிப்புநெய், சீரகம் வெங்காயம் அத்திப்பிஞ்சு அவரைப்பிஞ்சு முருங்கைப்பிஞ்சு இவைகள் சேர்த்துக் கொள்ளவும், அனுபவமுறை.

பெண்களுக்கு அடிக்கடி பேதியாவதற்கு

உயர்ந்த சர்பத்து:-10-பங்காளா வாழைப்பழத்தை உரித்து ஓர் கோப்பையில் போட்டு இரண்டுபிடி நெல்லுமி நெல்லிக்காய்பிரமாணம் சுண்ணும்பு இவைஇரண்டையும் ஷி பழத்தில்

போட்டு மூன்றையும்சேர்த்து நன்ருய்பிசைந்து ஒருமணி நேரம் வெய்யிலில் வைத்து துணியில் போட்டு பிழிந்தால் ½-அவுன்ஸ் திராவகம்இரங்கும் இதில் தம்படி பனங்கற்கண்டு ஒருகரண்டி பசுநெய் கலந்து மூன்றுவேளை கொடுத்தால் பெண்களுக்கு அடிக்கடி பேதியாவதும் கிராணி பேதியும் குணமாகும், அனுபவமுறை,

### நேத்திரம் துடித்தலுக்கு

வெற்றிலைச்சாற்றில் சுக்கை இழைத்துஒரு சிறுதுளி கண்ணில் தெளித்தால் நேத்திரவாயு வலி இமை துடித்தலும் குணமாகும,

### நீர்கட்டு மல்க்கட்டினல் உண்டாகும் வியாதிகளுக்கு

சோம்பு, சீரகம், சதகுப்பை, சுக்கு, செவ்வியம், திப்பிலி இவைகளை பாலில் அவிழ்த்து சிவதைவேர், கருவாய்ப்பட்டை, நெல்லிவத்தல், பிஞ்சுகடுக்காய், தான்றிக்காய் இவைகளின் தோல் கால்பலம் சேர்த்திடித்து வஸ்திரகாயம் செய்து1 1/½-பலம்இந்துப்பு 1½-பலம்பொரித்த வெங்காயம் பொடித்து சேர்த்து ஒருபைசா எடை வாயில்போட்டு வென்னீர் சாப்பிட நீர் கட்டு மலக்கட்டுகளாலுண்டான சகல வியாதிகளும் குணமாகும்,

### உஷ்ணபேதி அல்லது கழிச்சலுக்கு

ஓர் புதுசட்டி வாங்கி அதன் உட்புறம் லேசாக சுண்ணும்புத்தடவி ஆரவிட்டு அடுப்பில்



வைத்து 15-ந்துமிளகாய்வற்றலை அதில்போட்டு கறுப்பாகும் வரை வறுத்து ஒரு தம்பிடி கடுகு போட்டு பொரிந்ததும் உரித்த உள்ளிப்பூண்டு 1/2-பலம் போட்டு 1/½-படி தண்ணீர்கொட்டி 1/4-படியாக சுண்டியபிறகு இறக்கி வடிகட்டி வேளைக்கு 1/½-ஆழாக்கு வீதம் ஒருநாளைக்கு மூன்றுவேளை கொடுத்தால் உஷ்ணபேதி கிராணிகழிச்சல் குணமாகும். அனுபவமுறை,

### உலர்ந்த ஸ்நானத் தைலம்

நெல்லிக்காய்சாறு 1/4-படி பொன்னுங்கன்னிச்சாறு, கீழாநெல்லிசாறு, பொடுதலைச்சாறு வல்லாரைச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, கற்ருழைச்சாறு வகைக்கு 1/8-படி சந்தனம் வாலமிளகு, அரிசி, திப்பிலி வகைக்கு பலம் அரைத்து ஷை சாற்றில் சேர்த்து பசுவின்நெய் 5-பலம் பசும்பால் கால்படி நல்லெண்ணை 1-படி விளக்கெண்ணை 1-படி இவைகளைஒன்றுசேர்த்து சாறும, பாலும் சுண்டக்காய்ச்சி இரக்கி ஆர வைத்துக்கொண்டு தேய்த்து ஸ்நானம் செய்து வந்தால் நேத்திரவயாதிகளும, கைகால்எரிச்சல் தலைவலி, பீனிசம் இன்னும் அநேக வியாதிகள் குணமாகும்.

### சிரங்குகளுக்கு

குப்பைமேனிஇலை மஞ்சள்கார்போகஅரிசி இவைகளை சேர்த்தரைத்து தேகத்தில்தேய்த்து கொஞ்சநேரம் பொறுத்து சீக்காய் தேய்த்து ஸ்நானம் செய்து வந்தால் குணமாகும்,

## மூலிகைகளால் தீரும் வியாதிகளின் குணங்களின் விவரம்

அத்தி. இதன் பிஞ்சால் ஆசனவெரிச்சல் மூலக்கிராணி தீரும்,

இதன் பாலால் அதிக உஷ்ணம் பித்தம் தீரும், ஜீரணமுண்டாகும்,

இதன் பழத்தால் இரத்தகாசம் மேகம் தீரும், கபமூற்சையுண்டாகும், சீதளமுண்டுப் பண்ணும்.

இதன் காயால் உஷ்ணம் சூலைபுண்கள் மலபந்தனம் மேகவாதம் இவை போகும்,

இதன் பட்டையால் இரத்தசீதபேதிநாற்றமெடுத்தரணம் மேகம் இவை தீரும்.

இதன்கள்ளால்விசேஷமானவெரிஉஷ்ணம் மேகம் தீரும்,

அதிவிடயம். கிராணி வாந்தி உஷ்ணம் பேதி இவை தீரும்,

அஷ்டமூலம். சோகை வாதரோகம் பல்ரோகம் நிவர்த்தியாகும்.

எலியாமணக்கு பித்தம் வாதம் மந்தம் இவையுண்டாகும்.

அசோகபுஷ்பம், சாந்தியுண்டாகும்,

அக்ராகாரம். ஜ்வரம் தாகம் தோஷம் வாதம் இவைகள் தீரும்,

அபயக்கடுக்காய். சர்வ ரோகம் தீரும்,



அபினி. இதனால் சிலரோகம் நிவர்த்தியாகுமானாலும் இதைத் தின்பதினால் அபாயமுண்டாகும் ஔஷதங்களில் சுத்திசெய்து கொஞ்சம் சேர்க்க வேண்டியது,

அயம். அக்கினிமந்தம் தேகஸ்தூலம் கிராணி குன்மம் பித்தபாண்டு வாய்வு ஸ்வேதகுஷ்டம் தீரும், பசியும் பேதியும் உண்டுபண்ணும்

ஷை செந்தூரம், க்ஷயம் பாண்டு தீரும், இதை தின்னுங்காலத்தில் அபினி எள்ளு கடுகு கத்தரி கெஞ்சாக்கள் புகையிலை புளி பூசணிக்காய் ஸ்திரிபோகம் விடவேண்டியது,

அஸ்வகந்திக்கிழங்கு, ஆயாசம் க்ஷயம் கரப்பான் பாண்டு வாதம உஷ்ணம்தீரும். போகமுண்டுபண்ணும்,

அமிர்தகடுக்காய். ஸ்லேஷ்மம் இதரரோகங்கள் நிவர்த்திக்கும்.

அபிரேக்கு. அண்டவாதம் நேத்திரரோகம் பஹுமூத்திரம் வாதம் பித்தம் மஹோதரம் மேகம் உஷ்ணம் தீரும்.

அப்ளாகாரம். கபம் வாதம் குன்மம்சூலை சுவாசகாசம் இவைகளை ஹரிக்கும்.

இஞ்சி, திரிதோஷம் இருமல் கபம் நுரையீரல்வியாதி மேகம் வீக்கம் சூலை ஜ்வரம் சர்வதோஷம் இவைதீரும்,

எலியாமணக்குக்கொட்டை, இருமல் எலிக்கடி கபம வாத சீதபேதி இவை தீரும்

அன்னபேதி. சூலை நீர்மகோதரம் மந்தம் மூலையடுத்தரணம் இவைதிரும்.சாதத்தில்போட்டால் நீராகும்

ஆடாதோடை, 13-ஜன்னியும் கபம் வாதம் வாதஜ்வரமும் திரும். இதனுடைய வேரால் கழுத்துவலி காசம் சுவாசபந்தனம் மந்தம் இவை திரும்.

அல்லிப்புஷ்பம். தாகம் பஹுமூத்திரம் மேகரணம் திரும்,

கடுகு. கபம் காசம் குன்மம் பித்தமந்தம் சீதம் மயக்கம் வாதப்பிடிப்பு திரிதோஷம்வாய்ரணம்இவைதிரும். இதனஎண்ணெயால்இரத்தபித்தம் கபம் குஷ்டம மூலம் வயிற்றுவலிவாய்வு சுக்கிலபந்தனம் இவைகள் திரும்.

இலைக்கள்ளிப்பால் சகலரணம் கட்டிவாதம் சூலை குன்மம் ஜன்னி இவைகள் திரும்,

ஆகாசத்தாமரை: புழுக்களிருக்கும் ரணம் குஷ்டம் சிலந்திசிரங்கு சொரிசிரங்கு இவைகள் திரும்,

காட்டுப்பலா: தோஷங்கள் உண்டாக்கும்.

வாழை, இதன் பழத்தால் சோகரோகம் பித்தரோகம் இவை திரும்.

இதன் காயால் வயிற்றெரிச்சல் காசம் பித்தம் பேதி வாந்தி வாய்வு வாயில்நீர்வருதல்திரும்

இதன் கிழங்கு அக்கினிதீபனம் உண்டாக்கும்



இதன் தண்டு குடல் புரட்டு கள்குடித்ததால் வரும் போதை இவற்றை நீக்கும்.

இதன் கிழங்கிலூறும்தண்ணீரால் இரணம் இரத்தபேதி ஆயாசம் பாண்டு தீரும். குளிர்ச்சியும் பலமும் உண்டாகும்.

இதன் பிஞ்சு இரத்தமூலம் இரத்தபேதி பஹுமூத்திரம் மேகம் கரப்பான்ரணம் தீரும,

இதன் புஷ்பத்தால் உஷ்ணம் காசம் கால் கையெரிச்சல் பித்தம்மூலம் இரத்தமேகப்பேதி இவைகள் தீரும், தாதுபுஷ்டி உண்டாக்கும்.

இதன்இலை அக்கினிமந்தம் இருமல் கரப்பான் மேகவாதம் இவற்றைத் தீர்க்கும்,

மொச்சைக்காய் பித்தசிலேஷ்மம் வாயுரோகம் உண்டாக்கும்.

இதன்கொட்டையால் திரிதோஷமும்உண்டாகும்,

அதன்கொடி சீதளம் சிரங்குநீங்கும்அதன் பிஞ்சு வாதம் நீங்கும்,

அரிதாரம். இரணம் இருமல் க்ஷயம் கரப்பான் இவை தீரும்.

காராமணி. பசிதீரும், கபம் பேதி மந்தம் மாரடைப்புதிரிதோஷம இவையுண்டுபண்ணும்

அபரஞ்சி. அக்கினிமந்தம் உஷ்ணம் க்ஷயம் பித்தம் மேகம் வாதம் தீரும் தாதுபுஷ்டியுண்டாகும்,

காட்டுமாமரம். தாபம் ஹரிக்கும்.

காட்டுமல்லிவேர். ஜ்வரம் தாகம் நாவரட்சி

மந்தம் பேதி இவை தீரும்.

காட்டுத்துளசி, உப்பிசம்ஹரிக்கும்,

காட்டுச்சீரகம். குன்மம் வாதம் பித்தம் மேகம் தீரும்.

காட்டுக்கருணை. ஜ்வரதோஷம் மூளைமூலம் மேகம் ஹரிக்கும் அக்கினிதீபனம் உண்டுபண்ணும்.

ஊமத்தை. திரிதோஷம் இரணம் கட்டி இவைகளைப் பேர்க்கடிக்கும் இதன் விரையால் அதிசாரம் ஜ்வரம் இவைநீங்கும். பயித்தியமுண்டுபண்ணும்

உளுந்து. இந்திரிய நஷ்டத்தை நிவர்த்தி செய்யும் வாதசீதளம் உண்டு பண்ணும்.

இதன்வடையால் பித்தம் போகும் வாதம் உண்டு பண்ணும்.

இதன்மாவு. பலத்தையும் வாதத்தையும் உண்டுபண்ணும்.

உப்புத்தண்ணீர். குடல்வாதம் அஜீரணம் பித்தம் வாதநோய்கள் தீரும்.

உப்பு. அக்கினிகுன்மம் அக்கினிவாதம் பலமானகட்டி இவைகளைத தீர்க்கும்.

ஈச்சங்கற்கண்டு, புழுக்கள் அநேகரோகம் உண்டுபண்ணும் இதன்வெல்லம் திரிதோஷம் புத்திமந்தம் உண்டுபண்ணும் இதன் கள்ளுசில ரோகங்களையுண்டுபண்ணும்.

இலுப்பை எண்ணெய். துர்ப்பலம் திரும் இரணங்கள் சிரங்குமுதாலானவை சம்பவிக்கும்



அண்டவாதம் திரும் இதன் பூவால் தாகம் ஜ்வரம் தீரும் பைத்தியரோகம் சம்பவிக்கும்,

பெருங்காயம். அஷ்டகுன்மம் கர்ப்பசூலை தந்திமூலரோகம் மகோதரம மார்வலி இவற்றை ஹரிக்கும்.

இங்குலீங்கம். கட்டி இரணம்சிரங்குசிலந்தி குஷ்டம் ஜ்வரம் சூலைபேதி வாதம்ஹரிக்கும்.

பசும்பால் * அஸ்தகஜவாதம் உஷ்ணம் பைத்தியம் கபம தாகம் மூர்ச்சைதீரும். சிலேத்தும்உண்டுபண்ணும் இதன்மயத்தால் உஷ்ண வியாதிகள் போகும. இதன் தயிரால ஆயாசம போகும் அக்கினி தீபனம் உண்டு பண்ணும் இதன்நெய்யால் சகல திரிதோஷ வியாதிகள் நீங்கும் இதின்மோர்தயிரைவிட மேன்மையாம் இதன் கோமியத்தால் சகல விஷங்கள் பித்த பாண்டு உதிரரோகம் தீரும். விரோசனக்காரி.

வரகுஅரிசி. இதன் சாதம் தின்பதினல் இந்திரிய நஷ்டமாகும். பித்தம் தலைவலி சிரங்கு இன்னும் சிலவியாதிகள் உண்டுபண்ணும்

முத்தெண்ணை. சகல வுதிரசூலைகளும் குஷ்டம் சிரங்கு முதலானவைகளும் தீரும். இது விரோசனத்திற்கும் ஆகும்.

சிகப்புபாதரிபுஷ்பம். இரத்தபித்தம் கண்ணோய் இரணம் தீரும்.

சிகப்புதுளசி, விஷங்களும் கடியும் தீரும்.

சிகப்பு அரைக்கீரை, ஸ்திரீகளுக்கு உண்டா

கும் பிரமேகம் பித்தம் உஷ்ணம் இவைகளை ஹரிக்கும்.

சிகப்புக்கரும்பு. கபம் தாகம் பித்தரோசம் இவைதீரும்,

சிகப்புக்கடுக்காய். தேககாந்தி புத்தியையுண்டுபண்ணும்.

சிகப்பு அல்லி: ஸ்லேஷ்மரோகத்தை ஹரிக்கும்.

வெய்யிலில் காய்ந்த தண்ணீர்: சகலரோகத்தை போக்கடிக்கும் தேகத்திற்கு சகலவித சுகமுண்டாகும்.

எலிக்காதுக்கீரை. ஜ்வரம்தாகம்பஹுமூத்திரம் பிரமேகம் நிவர்த்திக்கும். இந்திரியம்பலப்படும்.

எருமைபால். புத்திமந்தம் வாதம் திமிர்நித்திரை இவற்றை உண்டுபண்ணும் மருந்துசுபாவத்தை கெடுத்துவிடும்,

*அஸ்தகஜவாதம் யென்பது-பக்ஷவாதம்

ஷை தயிர், பித்த எரிச்சலை போக்கும்.

ஷை மோர், கபம உண்டுபண்ணும்.

ஷை நெய்: நேத்திரப்பிரகாசம் புத்தி தேககாந்தி இவற்றை நீக்கும், கரப்பான் பித்தம் வாதம இவற்றையுண்டுபண்ணும்,

இளநீர், இராத்திரியில்குடித்தால்வயிற்றில் கிருமிகளை போக்கும்

அளிஞ்சல் மரம், காசம் குஷ்டம் வாய்வு



விஷம் இவைகளை ஹரிக்கும் பித்தம் உண்டுபண்ணும் இதன் விரை விஷங்களைப் போக்கடிக்கும்

* கானத்தின்தண்ணீர்: தாகம் பித்தம் தீரும்.

ஊறுகாய்: ருசிக்கும் திரிதோஷம் நிவர்த்திக்கும் ஜடராக்கினி உண்டாக்கும் கொள்வாதரோகத்தையும் ஹரிக்கும்.

மாவிலங்கப்பட்டை, மேகம் ஜன்னி இவைகளைத்தீர்க்கும். இதையறைத்து பதறிடக்கொப்பளிக்கும்

நாயுருவி, இதன் இலை கபம் தந்திமேகம் பேதி மந்தம் வேர்வை இரத்தமூலம்இவற்றைப் போக்கும் இதன்விரை பசியைப்போக்கடிக்கும் இதின்பட்டை ஸ்திரீகளின் சூதகம் சுகுணம் செய்யும் வங்கத்தை செந்தூரிக்கும் இதன்வேர் வஸ்யத்திற்குப் பிரசித்தியாகும்

நெல்லிக்காய். உஷ்ணம் ரணம் வாந்தி வீக்கம் முதலானதும் ஹரிக்கும், இதன்வேர் காய்ச்சல் மலபந்தனை ஜன்னி இவற்றைத் தீர்க்கும்.

எழுகு, அயத்திற்குச் சொன்னதைப்போல் இதற்கும் உண்டு ஆகிலும் எழுகு அதிக துரிதமாய் வியாதியைப் பீடிக்கும்.

கர்ப்பூரவள்ளி. இருமல் கண்வலி கபம் காய்ச்சல் வாதம் இவைகளைத்தீர்க்கும்

---

* கானகத்தின் தண்ணீர்-கடுமையாகிய வெய்யலுள்ள ஜலவற்ற பூமியில் விளையும் உப்பு

கர்ப்பூரம் ஜ்வரம் ஜலதோஷம் ஜன்னிகாது நோய் பித்தம் மந்தம் முகரோகம் வாந்தி இவைகளைத்தீரும். தீபனமுண்டாக்கும்.

கருணைக்கிழங்கு மூலவியாதியை தீர்க்கும் நேத்திரகாந்தி கிரந்தி சூலைஉண்டாகச்செய்யும்

கஸ்தூரி மஞ்சள். கரப்பான் இரணம் மத்தாக்கினி இவற்றைஹரிக்கும் சுக்கிலத்தைவிர்த்தி செய்யும்.

கஸ்தூரி. கபம் ஜன்னி தலைவலி இவற்றை ஹரிக்கும்

கடுக்காய், ரணம் அடிப்பட்டரணம் கண்வலி நாக்குவலி இவைகள் தீரும்,

கடுகுரோகணி. கரப்பான் காய்ச்சல் திரிதோஷம் ரணம் மந்தம் வயிற்றுவலி வாய்வும் தீரும்

ஓமம். அதிசாரம் இருமல் சீதம் பேதிமாந்தம் மூலரோகம் இவற்றைத்தீர்க்கும்,

ஓரிலைத்தாமரை. சீதம் மேகம் தீரும். தாது புஷ்டியுண்டாகும் இதன் இலையரைத்துமோரில் கலந்து கொடுத்தால் பால் உண்டாக்கும்,

ஆனைநெரிஞ்சி. வெள்ளைகுஷ்டம் வயிற்று எரிச்சல் சிலமேகம் பித்தம் தாகம்இவை தீரும்.

ஏலரிசி. எல்லா ரோகத்தையும் ஹரிக்கும், தாதுவிர்த்தி செய்யும்

ஆற்றுத்தண்ணீர், தாகம் உஷ்ணம் கபம் இவை தீரும், தாதுவிர்த்தி யுண்டாகும்,



காவிக்கல். அக்கினிசிரங்கு மேகம் உஷ்ணம் இவைகளை ஹரிக்கும் தேககாந்தி உண்டாக்கும்

கார்போகஅரிசி. கரப்பான் வாதம் கபம் இவைகளைத் தீர்க்கும் பித்தம் உண்டாகும்,

காந்தம், அயபாகத்திற் சொல்லியது போல் இதுவுமப்படியே செய்யும்.

காடி. தேகத்தில் துர்நீரைத் தீர்க்கும்,

சிறுகோவை. பிஞ்சு விஷம் வீக்கம் ரணம் இவற்றைத் தீர்க்கும்,

வெங்கலபற்பம். சில ரோகங்களை ஹரிக்கும் குஷ்டம் ஜ்வரம் மூலம்இப்பற்பத்தைவெல்லாது தாதுபுஷ்டியுண்டாக்கும். இதன் களிம்பு விஷத்திற்குச் சமமானது, நேத்திர வியாதியை ஹரிக்கும்,

கற்பூரவாழை, வயிற்றின் பிணியை ஹரிக்கும்.

துவரம்பருப்பு, பித்தம் ஜன்னி வாதம் சிலேஷ்மம் விஷம் இவைகளை ஹரிக்கும் தாது வீர்த்தியும் பலத்தையுமுண்டுபண்ணும்

கத்தாழை. எரிச்சல் குஷ்டம் குன்மம்சூலை மூலம் மேகம் இவை ஆற்றும்.

கற்கண்டு. உஷ்ணம் கபம் இருமல் வலி வாந்தி நமை இவைகளை நீங்கும், தாதுவிர்த்தி யுண்டாகும்

களாக்காய். இரத்தபித்தம் வாந்தி இவை தீரும், பசியெடுக்கும்.

இதன்பழம்: சீதவாதமுண்டாகும், காயா லுண்டான குணம் பழத்தாலுமுண்டு இதன் வேர்காயின் குணங்களைவிட துல்யம், விஷத்தை ஹரிக்கும் பிரசவித்த ஸ்திரீகளின் மாபை முத லானவையும் தீர்க்கும்,

மலைத்தாமரை: இரும்பை தாம்பிரம் செய் யும், பலமான குஷ்டம் விஷத்தையும் தீர்க்கும்.

மலைநெல்லிக்காய், இருமல் உஷ்ணம் பித் தம் இவற்றைத் தீர்க்கும் குளிர்ச்சியை உண்டு பண்ணும். இதன் வேரால் தீராத வாந்தி காய்ச் சல் பித்தஜன்னி பித்தம் இவைபோகும.

முசுமுசுக்கை: கட்டியை கரைக்கும் குழந் களுக்குக் கபத்திற்கு ஆகும்,

நாய்வேளை. அண்டவாதம் வயிற்றில் மல பந்தம தீரும.

நாய்துளசி. இருமல் கபம் தீர்க்கும் தேகத் திற்குச் சத்துவை யுண்டுபண்ணும்.

குராசானி ஓமம், கபம் இரணம் மேகம் வா தம்பேதி இந்திரியநஷ்டம் இவைகளை ஹரிக் கும் மயக்கமூண்டாகும்.

குப்பைமேனி, மூலம்குன்மம் கபம்சுவாசம் கிரந்தி சொரி இவற்றை ஹரிக்கும்.

குங்குமப்பூ. கண்புஷ்பம் கால்வலி கபம் தாகம மேகம் இந்திரியநஷ்டம் சீர்தோஷம் கா துவலி பீத்தம மதுமேகம இவைகளை மாற்றும்

இச்சலிக்கிழங்கு, தலைவலி இரணம் விஷம் இவற்றை ஹரிக்கும் இதன் இலையால் கிரகதி போகும்,



பாவைஇலை. பாஷாணதோஷத்தை ஹரிக் கும், இரசத்தை முரிக்கும், பேதியுண்டாக்கும் இதன் காயால் கிரிமிகள் ஸ்லேஷ்மம் ஒழியும் இதன் பழத்தால் கிரிமிகள் குஷ்டம் சுவாசம் திரிதோஷம் மேகம் இவைகள் தீரும்,

கருந்தக்காளி: பித்தம் வாய்ரணம் ஆற்றும் கழுதை தும்பை, இரத்தபேதி மூலம் இவை தீரும்.

ஆடுதீண்டாப்பாளை. வாதரோகம் காசம் குஷ்டம் இவை போம் இது மருந்துக்கு இதன் இரசம் கொடுத்தால் முறிந்து விடும்,

ஆனைத்திப்பிலி. கபம் தொண்டைக்கம்மல் இவை தீரும்.

பலகரைபஸ்பம், கண்வலி மந்தம் விஷஜ்வ ரம் இவைகளைத தீர்க்கும்.

கொடிஎலுமிச்சை. வாந்தி உஷ்ணபேதி இவைகளைத்தீர்க்கும்,

கெந்தக உப்பு. உஷ்ணம் குடல்வாதம் மந் தம் இவைகளை ஹரிக்கும்,

கருடன் கிழங்கு: குஷ்டம் சூலை கிரந்தி பாண்டு அரையாப்பு கரையாதகட்டி கொருக்கு வெள்ளை இவை நிவர்த்தியாகும்.

கரசலாங்காணி: பித்தம் பயித்தியம் இவை களைப் போக்கும்.

கஞ்சா. கரப்பான் பேதி இதை ஹரிக்கும் பித்தம பசியுண்டாகும், இது போதை வஸ்து வானதால் அதிகமாய்ச் சேர்க்கக்கூடாது.

பூவரசம்பட்டை, குஷ்டம் கிருமிகள்மகோதரம் மேகம் இவைகளை ஹரிக்கும்.

கசகசா, அதிசாரம் கிருமிகள் கிராணி இவை தீரும். நித்திரை விந்து காந்தி உண்டு

அறுகம்புல்: ரத்தபித்தம் தலைவலி வாதம இவைகளைத் தீர்க்கும். இதன்வேரால் திரிதோஷத்தையும ஹரிக்கும்.

கெச்சக்காய் சமூலம்: வாதரோகம் விஷம் அண்டவாதம் குன்மம் இவை போகும்.

அலரிப்புஷ்பம்; இரணம் குஷ்டம் சொரி சிரங்கு பித்தம் இவை தீரும்.

கோழி இரைச்சி: அனேக ரோகத்தையுண்டுபண்ணும்.

கொக்கு மாமிசம்: கோழி இரைச்சியைப் போல் ரோகத்தை யுண்டுபண்ணும்.

சாக்கரை : தித்திப்பான து கபம் வாந்தி பித்தம் இவைகளைத்தீர்க்கும்.

மாடுதிண்டாம்பாலை : பேதி நாசியிலுண்டாகு மெரிச்சல் இவைகளை ஹரிக்கும்.

சந்தனம்: காச்சல் கபம் சிரங்கு பித்தம் இவைகளை ஹரிக்கும்.

பிறண்டை: உஷ்ணவாயுவு கிராணி சூலை பேதி இவைகளை ஹரிக்கும்.

சதுரக்கள்ளி சமூலம்: கபம குன்மம் கடிவிஷம் சூலை மேகம வாதம் இதைப் போககடிக்கும். பேதியுண்டாக்கும்.



கௌரி பாஷாணம். சிலந்தி சூலை கனல் வேகம் வீக்கம் இவைகளை ஹரிக்கும்,

கோரோசனை. உள்மாந்தம் கபம் குழந்தைகள்ரோகம் மேகக்காய்ச்சல் நீரிழிவு வைசூரி இவற்றைத் தீர்க்கும்,

கோதுமை. பலம் தாதுபுஷ்டியுண்டாகும்

வள்ளிக்கிழங்கு, மேகம்தீரும் உதிரரோகம் உண்டுபண்ணும்.

பூசணிக்காய். பித்தத்தைஹரிக்கும் மருந்துகுணத்தை முரிக்கும் வாதமுண்டு பண்ணும். இதன்விரை நல்லது.

பணைக்கீரை சிரங்கு சீதம் இதை ஹரிக்கும் இதன் வேர் வயிற்றின் வலியைத்தீர்க்கும்,

குண்டுமணிஇலை இதை பீடிப்புக்களுக்கு பற்றிடலாம் இதன் விரை சிலரோகத்திற்குவுபயோகமான போதிலும் மலபந்தக்காரி ஆகையால் இதை யுபயோகிப்பது கலமல்ல.

குங்கிலியம், இரணம் சூலை மேகம் இதை தீர்க்கும்

வளயலுப்பு. குடல்வாதம் இன்னும் பல வாதம் குன்மம் சூலை உஷ்ணம் தீர்க்கும்.

புளியங்காய், பித்தம் நிவர்த்திக்கும் வாதம் உண்டுபண்ணும்

இதன்பழம் தாதுபுஷ்டி மந்தகுணம் பித்தம் தீரும். தேகம்மெலியும் அதிக ரோகமுண்டு பண்ணும் ஜன்னி வாதஜ்வரமுண்டு பண்ணும்.

இதன் பூவால் பித்தம்வாந்தியை தீர்க்கும் பாண்டுரோகத்தையடக்கி உஷ்ணத்தைஉண்டு பண்ணும்.

இதன்கொட்டை அதிசாரம் சுக்கிலமேகம் இவற்றைப்போக்கும்

சித்தாமுட்டி. சகலமானகாய்ச்சல் பித்தம் நேத்திரமந்தம் இவற்றை நிவர்த்திக்கும்

சிறுதேக்கு, வாதஜ்வரம் திரும

சேம்புக்கிழங்கு. மேகத்தை நிவர்த்திக்கும் பயித்தியத்திற்கு பிரயோஜனப் படமாட்டாது

சக்கிரவர்த்திக்கீரை. மூலவியாதி குஷ்டம் திரிதோஷமும் நிவர்த்தியாம்

வால்மிளகு. தாகம் வயிற்றுவலி பித்தம் இருமல் இவைகளை நிவர்த்திக்கும்

முலைப்பால். தாபதோஷம் பித்த ஜ்வரம் நிவர்த்தியாகும்

தண்ணீர்விட்டான்கிழங்கு உஷ்ண ஜ்வரம் பித்தம் சிலவியாதிகளும் திரும்

எருக்கன். ஜன்னி அநேக விஷங்களையும் வாதத்தையும் போக்கடிக்கும்

இதன் பால். கட்டி ஜன்னி வாய்வு போக்கடிக்கும் செந்தூரம் செய்யத்தகுந்த வஸ்து

இதன் இலை. எலிகடி கிருமிகள் குஷ்டம் சூலை மலபந்தம் வாய்வு இவைகளைத் தீர்க்கும்

ஜாதிக்காய். தலைபாரம் சீதஜ்வரம் சீத பேதி தீரும்



ஜாபத்திரி. பேதி தாபஜ்வரம் தீரும் தாது விர்த்தியுண்டாம் பித்தமுண்டுபண்ணும

கள்ளி. கிருமிகள் குஷ்டம் சிரங்கு இவற்றைப் போக்கடிக்கும்

ஜடாமாஞ்சில். இருமல் பித்தம் சுவாசம் உஷ்ணம் வயிற்றுவலி குஷ்டம் பழையஜ்வரம் இதைத்தீர்க்கும.

செருப்படை. ஸ்லேஷ்மம் சூலை மந்தம் வாதம் வாதகுன்மம் இதைத்தீர்க்கும்

சிறுலவங்கப்பட்டை, மூலவிரணம் இதை ஆற்றும. சீதளமுண்டுபண்ணும்.

சீந்திற்கொடி: ஜ்வரத்தையடக்கி தீபன முண்டுபண்ணும்

இதன்கிழங்கால். சிலவிஷங்கள் அதிசாரம் ஜ்வரம் மாந்தம் இவற்றைப் போக்கடிக்கும் காயசுத்தி தீபனமுண்டுபண்ணும்.

தான்றிக்காய். மேகம் பித்தம் மேகவாதம் உஷ்ணம் தீர்க்கும்

தாளிச்சபத்திரி, அஸ்திஜ்வரம் வாய்வு காசம் சுவாசம் ஸ்லேஷ்மம் மந்தம் இவற்றைப் போக்கடிக்கும், பசியை யுண்டுபண்ணும்.

தாளகம். இரணம் சிரசினவியாதி நேத்திர மந்தம் ஜ்வரம் க்ஷயம் இவற்றைத் தீர்க்கும்,

தாம்பிர பற்பம். எல்லா ரோகத்தையும் தீர்க்கும்.

சேராங்கொட்டை. மேகம் கரப்பான் கட்டி கிருமிகள் சிலந்திமூலம் பவுத்திரம் குஷ்டம்

சொரி சிரங்கு இதரமான வியாதிகள் தீரும் கர்ப்பமுண்டாகச் செய்யும்.

சீரகம். இருமல் குன்மம் தொண்டைக்கம் மல் பித்தம் வாந்தி ஜலதோஷம்போக்கடிக்கும் நேத்திரங்களுக்கு சலவை.

வெள்ளையூமத்தை: அதிசாரம் கிரந்தி மேகப்பேதி ரணம விஷக்காய்ச்சலைத் தீர்க்கும். இதை உள்ளுக்குச்சாப்பிட்டால் அதிக பித்தம் செய்யும் இதன்சாற்றை யெண்ணெயில் கலக்கிக் காய்ச்சித் தடவலாம்.

கோசை. உஷ்ணம் காசம் பித்தம் வாத ஜ்வரம் வாந்தி இன்னும் சில ரோகத்தை ஹரிக் கும்,

மைல்துத்தம். கண்ணோய் கரப்பான்காய்ச் சல்இவற்றைத்தீர்க்கும் வாந்தியுண்டுபண்ணும்

துததிநாகம், பேதி பைத்தியம மேகம உஷ்ணம போம்

சயிந்திலவணம். அஷ்டகுன்மம்கபம்சுவாச காசம் காசம் நாபிரணங்கள் தீரும்.

சூர்யகாந்தி. தேகத்தில் துர்நீரும வாதமும் இவை மாறும்

ஊசிக்காந்தம். ஜன்னி காய்ச்சல் பாண்டு மந்தம் மேகம் நிவர்த்தியாம்,

சாலாமிசிரி, இந்திரிய விளைவை யதிகப் படுத்தும்,

சாம்பிராணி. வாதம் வாந்தி தேகத்தின் துர்நீரையும் போக்கும்



கடலுப்பு. அஷ்டகுன்மம் சூலை பித்தம் போம் கொஞ்சம் பேதியை யுண்டாக்கும்.

சவ்வீரம், குஷ்டமுதலானவிரணமும்தீரும்

சிலாசத்து : நரம்பிலுண்டான கட்டிகளை மாற்றும்.

சீத்தாப்பழம் : பித்தம் கபம் பந்தம் உண் டுபண்ணும.

வெள்ளி : இரத்தமேகம் திரிதோஷம் இர ணம் இவற்றை மாற்றும் தாதுவிர்த்திசெய்யும்.

பேய்க்கரும்பு: சிலமருந்துக்கு ஆகும். பிசா சை யோட்டும்.

வெங்காரம் : அஷ்டகுன்மம் இரத்தமூலம் மேகம் கிருமிகள் ஜன்னி ரேடைப்பு இவை தீரும்.

விஷ்ணுகிராந்தி : இருமல் கபம் விடாத காய்ச்சல் தீரும்.

வாயுவிளங்கம் : குஷ்டம் குன்மம் நாபீ விஷம் பாண்டு இவை தீரும்,

நெற்பொரி : தாகம் பேதி வாந்தி இவை யாற்றும்.

வசம்பு: அக்கினிமந்தம் சூலை ரணம் பேதி வாயுவு இவைகளைத் தீர்க்கும்.

கத்தாரக்காய்: கபம தீரும் பித்தம் கிரந்தி சிரங்கு உண்டாகும்.

இதன்பழம் : கபம் சுவாசம் வாதம் தீரும், கரப்பான் குஷ்டம் தாதுநஷ்டம் பித்தம் கிரந்தி உண்டாகும்.

இதன்பிஞ்சு : திரிதோஷத்தையும் ஹரிக்கும.

ஐவிரலிக்கோவை; கரப்பான் வீக்கம் இது தீரும். காமம் கர்ப்பம் பலம் இந்திரியவிர்த்தி யுண்டாகும்,

இலவங்கப்பூ : அதிசாரய இரத்தபேதி கண்புஷ்பம ஜன்னி ஜ்வரம் சுக்கிலநஷ்டம் பேதி பித்தம் வாந்தி இவைகளைத் தீர்க்கும.

இலவங்கப்பத்திரி : சுவாசகாசம் தாகம் தாதுநஷ்டம் பித்தம் மேகக்காய்ச்சல் மேகக் கட்டி வாந்தி உஷ்ணம் இவை தீரும்.

இலவங்கப்பட்டை : இருமல் சுவாசகாசம் பாம்புவிஷம் தாதுநஷ்டம் இவைகளைத் தீர்க்கும்,

அம்மையார் கூந்தல் : இடுப்புவலி பேதி ஜ்வரதாபம மாந்தம மேகம் இவை தீரும். நடுக்கல் உண்டாகும்.

அரக்கு : சுவாசகாசம குஷ்டம் குன்மம் ஜன்னி இரணம் சிரங்கின்நோய்கள் தீரும்.

ரோஜாப்பூ ம்தகத்திற்கு ஆரோக்கியமுண்டாகும்.

இலந்தை இதன்வேர் பசியுண்டு பண்ணும் இதன்இலை பித்தத்தை ஹரிக்கும். இதன்பழம் பித்தம் வாந்தி 'வாதம தீர்க்கும்.

தக்கோலம் : தாகம் ஸ்லேஷ்மம் மேகம் ஜ்வரம் பாண்டு இவைகளை ஹரிக்கும். தாதுவிர்த்தி பலமுண்டுபண்ணும்.



ரேவற்சினி: பித்தம் சுக்கிலமேகம் பேதி யுண்டாகும்.

றூமிமஸ்தகி: தாதுபுஷ்டி பெருக்கச்செய்யும்.

ருத்திராக்ஷம் : ஸ்லேஷ்மம் காய்ச்சலினுலுண்டான இரத்தபேதி இவை தீரும்.

கேழ்வரகு : பித்தவாத முண்டுபண்ணும். இதன் கூழால் பித்தம் மகோதரம் வாதம் தீரும்.

கல்சுண்ணம் : இரணங்கள் தலைவலி இவை தீரும்.

கற்காந்தம்: கிராணி காய்ச்சல் பாண்டு மந்தம் மூலம் மேகம் இவை தீரும்.

அரசன்செடிசமூலம்: இரணங்கள் சுக்கில பாதை தாகம் உஷ்ணம் தாதுவிர்த்தி புத்தியுண்டாகும்.

இரசகர்ப்பூரம்: சூலை குன்மம் அரையாப்பு கட்டி இவை தீரும்.

ஆண்பீர்க்கு : மந்தம் வயிற்றுவலி கிரஹசேஷ்டை முதலானதும் போகும்.

தேன்மெழுகு ; கொசுமெழுக்கு பற்பத்திற்காகும் ஈமெழுக்கு இரணங்களை யாற்றும் கர்ப்ஸ்திரீகள் மெழுக்கு தின்பதினுல் கர்ப்பம் கரைந்துபோகும்.

வெந்தயம் : அஸ்திஜ்வரம் தேகயெரிச்சல் சீதபேதி காசம் குழந்தைகளின் உஷ்ணபேதி இவை சாந்தமாம் தேகத்தில் சீதளமுண்டாகும் இதன் கீரையால் உஷ்ணபித்தம் தீரும்.

முருங்கைக்காய் : வாத முதலான நோய்களைத் தீர்க்கும். தாதுவிர்த்தி யுண்டுபண்ணும், பத்தியத்திற்காகும். இதன்பட்டை கபம் பேதி ஜன்னி வாயுவு விஷம் தீரும்.

முள்ளங்கி: சுவாசகாசம் கரப்பான் காசம் குடல்வாதம் குன்மம் சூலை தலைவலி வாதம் தீரும். இதன்இலை குன்மகட்டியை ஹரிக்கும். இதன்விரையால் தாதுபுஷ்டியுண்டாகும்.

முழுத்துவரை : மூலரத்தம் மூலத்தின் முளையையும் எடுக்கும்.

முத்துளசி : சகல விஷத்தையும் இரணத்தையும ஆற்றும்.

முள்ளுக்கீரை: இதன்கீரை தின்பதினல் வாயுவு நோய்கள் உஷ்ணம் உண்டாகும். இதன் இலைச் சாமபலால் உப்புண்டாகும், தங்கம் பற்பமாகும்,

முருதார்சிங்கி: கரப்பான் ரணங்களாறும்.

முளைக்கீரை : காய்ச்சல் காசம் மேகம் மந்தம் தாதுநஷ்டம் வாதமுண்டாகும்.

முத்துச்சுண்ணம் : அதிசாரம் கிருமிகள் குன்மம் வாதம் திரும்.

முந்திரிப்பழம்: தாகம்தீரும், தொண்டைக் கமமல் கரப்பான் இரணங்கள் உண்டாகும் இதன்பருப்பு பித்தவாதமுண்டு பண்ணும்

முளகாய்ப்பழம : குன்மம் இருமல் மந்தம் வாதம் தீரும்,



* முளகாய்க்கூட்டு. சகலமானரோகங்களை ஹரிக்கும்

மரமஞ்சள், காய்ச்சல் மூலம் சுவாசம் தீரும்

இதன்காயால். பித்தம் பசியும் தீரும். இரணங்கள்வாதமுண்டாகும்.

* பாகம்செய்த குழம்பு

இதன்பழம். தீபனமரிக்கும் காய் குணம் பழத்துக்குமுண்டு இதன்கெட்டகுணத்தை பசுவின்பால் மாற்றும்.

இதன்வேர் சீதரத்தம் வாந்தி தீரும்.

மாசிபத்திரி. உஷ்ணம் தேகநோய் வாய்வு தீரும்.

மாசிக்காய். நாக்குரோகம் நேத்திரரோகம் மேகவியாதி உஷ்ணம் இவை தீரும்.

மலாக்காசாம்ப்ராணி. இரத்தமேகம் மேகம் தாபம மேகவாதம் இவை தீரும்.

மலாக்காகெந்தகம். கபம் கபாலஉஷ்ணம் பித்தம் மேகம் இவைகளைத் தீர்க்கும்.

மலைதாங்கி. மூலம் அக்கினிமந்தம் காது வலி தீரும்.

மனேசிலை. காய்ச்சல் சுவாசகாசம் இவைகளைத்தீர்க்கும்.

மோர். பசு அல்லது தழைமேயும்ஆட்டின் மோர் மருந்துகளுக்கு உபயோகமாம்.

நுணுயிலை. மந்தம் மேகத்தைத் தீர்க்கும் காந்தியையுண்டாக்கும் குழந்தைகளுக்குஆகும்

இதன்காய். மேகநோயை ஹரிக்கும்.

இதன்பட்டை. கரப்பான் கிரந்தி ஸ்லேஷ்மஜ்வரம் இரணங்கள் இவைகளைத் தீர்க்கும்.

இதன்வேர், அக்கினிமந்தம் உஷ்ணம்போகும். கர்ப்பத்தில் மரித்த குழந்தையை வெளியாக்கும்.

பனிக்கட்டித்தண்ணீர். அதிக உஷ்ணம் ஆற்றும்

ஆல்ச மூலம். மேகம் உஷ்ணம் நிவர்த்திக்கும்.

இதன்பாலால். சுக்கிலம் விர்த்தியாகும் சகலரிணத்தையும் ஆற்றும

கொல்லைப்பல்லி, பல்வலி பித்தம் விஷம் வாதம் இவைகளைத்தீர்க்கும் தாளகபாஷாணவஸ்துக்களைச் சுத்திசெய்யத் தகுந்தது

சிறுதேக்குச்சமூலம். சகல ரோகத்தையும் நிவர்த்திக்கும்

அந்திமல்லிகை, இதன் இலையும் கிழங்கும் வாதம் இரணங்கள் வீக்கம் கட்டிகள் முதலானதையும் மாற்றும்

சிவகரந்தை. கரப்பான் வயிற்றின் கிருமிகள் சொரிசிரங்கு மேகம் உஷ்ணம் மலபந்தத்தைத்தீர்க்கும

முஷ்டிகீரை, இது சுக்கிலநஷ்டத்தை ஆற்றும் தேகத்திற்கு சௌக்கியந்தரும்

பொடுதலைச்சமூலம், அரைக்கட்டி உஷ்ணம் காசம் கிரந்தி சீதபேதி குழந்தைகள்மந்த



ரோகம் வாதம் குஷ்டம் தீரும் உஷ்ணத்தையுண்டாக்கும்

வெல்லம். மிதமாய்தின்றால்பிரமேகம்தீரும் உஷ்ணம் மேகமுண்டாக்கும்

வெண்டைக்காய், அதிசாரம் கபம் வாதம் சீதரத்தபேதி இவைகளை நிவர்த்திக்கும்

கல்யாணபூசணி. அஸ்திஜ்வரம் பித்தஜ்வரம் உஷ்ணம் இடுமருந்து மேகம் இவைகளை ஆற்றும்

முடக்கத்தான், அண்டவாதம் வாதம் பிடிப்பு சொரிசிரங்கு மலபந்தம் இவைதீரும்

பீர்க்கங்காய், சீதளம் பித்தம் வாதம் கபமுண்டுபண்ணும்.

பாதுமை, இதன்காயால் கபம் பித்தவிகாரத்தை நசிக்கச்செய்யும்.

இதன்பழம், தாதுவிர்த்திகரமாகும்

இதன் பருப்பு. கபம் உஷ்ணரோகம் சுக்கிலநஷ்டம் ஹரிக்கும்

இதன்தைலம், தேகத்திற்கு ஆரோக்கியம் உண்டாகும்.

பொன்பறம்பம், இது குத்தமாயிருந்தால் சகலரோகத்தையும் தீர்க்கும்

பிரம்மதண்டி, கபம் வாதம் தீரும்.

பட்டாணி, அதிக வாதரோக முண்டுபண்ணும்.

புல்லுருவி. இரணங்கள் குஷ்டம் கபம் வாதம் விஷம் இவை ஹரிக்கும் வஸ்யத்திற்காகும்,

பாக்கு. காய்ச்சல் மூலம் கிருமிகள் நிவர்த்தியாம்,

புடலங்காய், பித்தம் போம் மேகப்படைகள் உண்டாக்கும்.

பொன்னுங்காணி. வாதம் பித்தம் காசம் இவற்றை ஆற்றும் நேத்திரத்திற்கு நலமாகும்

பேராமுட்டிவேர், மாந்தம் சீதக்காய்ச்சல் பித்தவாதகாய்ச்சல் தாகம் தீரும்,

பெரியசீரகம். சகலரோகத்தையும் ஹரிக்கும் சலவைதீபனம் புத்தியுண்டாக்கும்

திப்பிலி. சகல வியாதியையும் தீர்க்கும். தாதுபுஷ்டியை யுண்டாக்கும். இதன் கட்டையெனுல் மோடி இதன் விரை திப்பிலியைவிட அதிக குணமானது.

பலாப்பழம. வாதம் கிரந்தி சிலேஷ்மம் இவைகளைத் தீர்க்கும்.

பாதரிபுஷ்பம், பித்தக்காய்ச்சல் உஷ்ணம் இவைகளைத் தீர்க்கும் வஸ்யத்திற்காகும்

பாதரசம், மேத்திரரோகம் கிரந்திகுஷ்டம் இரணங்கள் இன்னும் சில ரோகத்தையும் தீர்க்கும்

படிகாரம், குன்மம் தந்தரோகம் இவை தீரும்.

பனிநீர்ப்புஷ்பம், தாது நஷ்டத்தைத்தீர்க்கும்



பரங்கிச்சக்கை, மேகம் குஷ்டம் வாதம் மேகப்படை கட்டிகள் கீல்பிடிப்பு இவைதீரும்

பவழம். அதிக தாகம் திரிதோஷம் இந்திரியநஷ்டத்தையும் போக்கடிக்கும்

பலா, இதன் பிஞ்சு மந்தம் காய்கொட்டை இவைகள் ரோகங்களை யுண்டுபண்ணும்.

பருப்புக்கீரை, பித்தத்தை ஹரிக்கும்

பஞ்சலவணம், உதிரரோகத்தை யாற்றும்,

பச்சைதிப்பிலிவேர், தாகம் பித்தம் சகல மேகத்தையும் நிவர்த்திக்கும். போகசக்தியை யுண்டு பண்ணும்.

பச்சைக்குங்குமப்பூ. கபதோஷம் ஜலதோஷம் பீனிசம இவைகளை போக்கும்

பச்சைக்கர்ப்பூரம். மேகம் தாமம் குன்மம் கபம் பித்தம் இவைகள் தீரும். காந்தி வன்யமுண்டாகும்

நேர்வாளக்கொட்டை. சிலரோகங்கள் வாதம் தீரும், பேதியை யுண்டாக்கும்

நெய்பீர்க்கு, வியாதியை யுண்டுபண்ணும் பத்தியத்திற்காகாது

நிலவேம்பு, பித்தமயக்கம் வாதம் தீரும்.

நிலப்பனை, கிரந்தி சூலை உஷ்ணம் மேகம் குஷ்டம் தீரும். இரதத்தையும் அதிக போகத்தையும் வுண்டாக்கும்,

நிலஆவாரை குன்மம் ரணங்கள் படைகள் மலபந்தம் மூலவாயுதீரும் பேதியையுண்டாகச் செய்யும்.

முசுமுசுக்கை. பித்தம் மூலம் உஷ்ணம் ஹரிக்கும்

நீர்முள்ளி. அதிசாரம் வீக்கல் மேகம் தீரும் இதன் விரைக்குமுறக்கூறியகுணமெல்லா முண்டு இந்திரிய தாதுபுஷ்டி யுண்டாகும்

அரைகீரை. இரத்தபேதிதிராதபயித்தியம் தீரும் இது மகாருசிகரமாயிருக்கும்

எலுமிச்சை, குன்மம் சூலை திரிதோஷம் கபம் இவைகளை போக்கடிக்கும்

இதன் பழம், கண்வலி காய்ச்சல் தாகம் மயக்கம் விஷம் நிவர்த்திக்கும்

இதன் விரையால், பித்தம் நிவர்த்திக்கும்

நாகம். இருமல் கிரந்தி காசம் சுவாசகாசம் சூலை மூலரோகம் இவைகளைத் தீர்க்கும்.

சிறுநாகப்பூ, பித்தம் வாந்தி கபம் இரத்த வியாதி நமைச்சல் கெட்டவாசனை கண்ட வியாதி இவைகளை போக்கடிக்கும்.

பிரண்டை, அதிசாரம் இரத்தபேதி கபம் மூலவியாதி மந்தம் இரத்தவியாதிகள் வாய்வும் தீரும்

சிவனார்வேம்பு. சர்மகுஷ்டம் விஷம் பித்த வாதம் இன்னுமநேக வியாதியைத் தீர்க்கும் இதன்வேரால கடிவிஷம் திரும்.

கறுப்புகரிசலாங்கண்ணி. கை கால் யெரிச்சல்குஷ்டம் தொண்டைகம்மல் தாபம் பாண்டு ரணங்கள் பித்தம் இன்னும் சிலவிஷகடியையும் தீர்க்கும்



கறுப்புக்கடலை. காயசித்தியாகும்

கறுவேலம்பட்டை. இரசத்தால் உண்டான பிடிப்பு நாபிரணம் பித்தம்திரும் தந்தந்திற்கு வலுவையுண்டாக்கும்.

கறுப்புவேம்பு. என்றால் வேப்பஞ்செடி போலவிருக்கும் கறுப்புபுஷ்பம் பூர்க்கும் ஓர் சாதிச்செடி இதனால் கிழவனும் பாலயனுவான் ஆனல் இது அகப்படுவது துர்லபம்

கறுப்பு ஊமத்தை, குஷ்டம் காய்ச்சல் திரும் மயக்கம் தாதுவிர்த்தி உண்டாகும்.

கறுப்புஈயம். நேத்திரவியாதி கிரந்தி சீழ் கட்டி காய்ச்சல் சூலை நீர்கட்டு மேகம் வாதம் விஷம் இரணங்கள் ஆறும்

கறுப்புத்துளசி. இருமல் ஜலதோஷம் ஜன்னி சுவாசம் சூலை மூர்ச்சை இவைதிரும்

கருஞ்சீரகம். கரப்பான் காய்ச்சல் தலைவலி இதுகள் திரும்.

கறுப்புச்சித்திரமூலம். அரைக்கட்டி இரத்தக்கட்டி கிரந்தி சூலை இவை தீரும்.

கறுப்புக்குங்கிலியம். குத்தல் மேகவாதம் இவை திரும பித்தமுண்டாகும்,

நவாச்சாரம். சிலமேகம் குன்மம் மகோதரம் இவைகளை போக்கடிக்கும்.

நரிவெங்காயம், கபம் உப்பிசம் தாபம் இவைகளைத்தீர்க்கும.

நத்தை, மலவியாதி மூலவியாதிகளை போக்கடிக்கும் தாதுவிர்த்தி யுண்டாக்கும். நித்தியம

தின்பவர்களுக்கு அசீர்ணரோக முண்டுபண்ணும்.

வெள்ளரிக்காய். எரிச்சல் கரப்பான் மூத்திரவியாதி இவைகளை போக்கடிக்கும். பசியை யுண்டுபண்ணும்

இதன் பிஞ்சால். திரிதோஷம் தீரும்.

இதன் பழத்தால், சைத்தியமுண்டாகும்.

இதன் விரையால், மூத்திரபந்தனம் மூத்திர வழியில் உண்டாகும் வியாதிகள் மேகம் தீரும்.

தொட்டி பாஷாணம். கிரந்தி காய்ச்சல் கண் வைத்தகட்டிகள் வாதம் இவை தீரும்.

தேவதாரி, உஷ்ணம் பீனிசம்பழையகாய்ச்சல் தீரும்,

கட்டுக்கொடி. இதன் இலை நீரைகட்டி விடும் இலைத்தின்பதினுல் இந்திரியத்தை கெட்டிப்படுத்தி உஷ்ணத்தை யடக்கும்,

உத்தாமணி, பல்வலி உப்பிசம் குளிர் குன்மம் மந்தம் வாதம் இன்னும் சிலவியாதியை யும் கண்டிக்கும்.

செம்பருத்தி, பித்தம் மேகம் இவற்றை ஆற்றும் இதன் புஷ்பத்தால் தாகம் பேதிவயிற்றின் சங்கடம் சுக்கிலாஷ்டம் உஷ்ணம் தீரும்,

மாதளம்பழம், உஷ்ணத்தை யெடுக்கும்,

திராக்ஷை, உள்மாந்தம் க்ஷயம் காய்ச்சல் சுவாசம், தாகம், ஸ்தாபரவிஷம், பித்தம், மத மூர்ச்சை மூத்திரரோகம், மேகம், வயிற்றில்மந்தம் உஷ்ணம் இவைகளைப் போக்கும். குளிர்ச்சி



யைத்தரும் நேத்திரபிரகாசம் தாதுபுஷ்டி யுண்டாகும்,

மருக்கொழுந்து. கபம் உஷ்ணம் மந்தாக்கினி இவைதீரும,

தர்ப்பைவேர், கபம் சகலகாய்ச்சல் தோஷம் இவற்றை ஹரிக்கும்.

தேன். திரிதோஷம் அரோசிகம் மந்தம் இவைகளை நிவர்த்திக்கும். இரத்தசுத்தியுண்டு பண்ணும்.

தேங்காப்பூ, பிரமேகம் மேகம் இவைகளை மாற்றும் இதன் கள்ளும் இதன் வெல்லமும் ரோகத்தை யுண்டுபண்ணும் இதன்எண்ணெய் இரணங்களை நிவர்த்திக்கும் ரோகத்தை வளர்க்கும் இதன்பால் ஊஷ்ணரணம் வாய்ப்புண்ணை ஆற்றும் பித்த ரோகமுண்டு பண்ணும்.

வெள்ளைமிளகு, கபம் வாதம் கிராணிகாய்ச்சல் மேகம தீரும். தீபனம் உண்டாக்கும்.

வெள்ளைப்பாஷாணம், சகல வியாதியை யும் தீர்க்கும்.

வெள்ளைத்தாமரைப்பூ. பித்தமேகம் பித்த வாய்வு கீல்வாய்வு மூலம் இவைகளை நிவர்த்திக்கும் பெணகளுக்குக் கர்ப்பந்தரிக்க செய்யும்.

வெள்ளைகரசலாங்கண்ணி, நாபிகமலத்தின் ரணம் இரணங்கள் மேகம இவற்றை ஆற்றும்.

வெள்ளையீருள்ளி. எலிகடி விஷம் வாதம் இவற்றை நிவர்த்திக்கும்,

வெள்ளியம், கபம் கரப்பான் கிரந்தி மேகம் பித்தம் மந்தாக்கினி இவைகளை ஹரிக்கும்,

வெள்ளாட்டின்பால், இது நல்லதாயிருந்த போதிலும் அதைவிட தயிர் மோர் வெண்ணை நல்ல வஸ்து.

வெள்ளைநாபி, குஷ்டம் ஜன்னி காய்ச்சல் குன்மதோஷம் நிவர்த்தியாகும் இது மருந்துகளுக்கு நல்ல வஸ்துவாயிருக்கின்றது.

வெள்ளைசிவதைவேர். பித்தத்தை ஹரிக்கும்.

வெள்ளைகடுகு, குஷ்டம் பக்கவலி பாலகிருஹதோஷம் இவைகளை நிவர்த்தி செய்யும்.

மேற்கூறிய சரக்குகளை எந்தெந்த சரக்கை எந்தெந்த பாகமாய் செய்து கொடுக்க வேண்டுமோ அதுபோற்செய்து கொடுக்க அவ்வவ் வியாதிகள் தீரும்.

---

## இ:.து தமீழ் அளவு

| | |
|---|---|
| 3½ குண்டுமணி எடை | 1 பணவெடை |
| 9 பணமெடை | 1-வராகனெடை |
| 1½ வராகனெடை | 1 களஞ்சி |
| 10-வராகனெடை | 1 பலம் |
| 1 ரூபா எடை | 1 துலாம் |
| 8 பலமெடை | 1 சேர் |
| 1[illegible]-பலம் அல்லது பௌ | 1 இராத்தல் |



| | |
|---|---|
| 24 பலம் | 1 பக்காசேர்[ன் |
| 40 குண்டுமணி எடை | 1 களிஞ்சி |

## இ:.து இங்கிலீஷ் அளவு

| | |
|---|---|
| 1 கிரைன் | ½ குண்டுமணி எடை |
| 1 ஸ்குருபில் | 10 குண்டுமணி எடை |
| 1 டிராம் | 32 குண்டுமணி எடை |
| 1 ஔன்ஸ் | 8 வராகனெடை |
| 1 டிரிங்கு | 3 வாரகனெடை |
| 1 பயிண்டு | 160 வராகனெடை |
| 1 காலன் | 128 பலம் |

## ஔஷதங்கள் செய்யுமிடங்களாவன.

சுசிகரமான வீடு-அதாவது சுத்திபடுத்திய வீடு
தெய்வஸ்தானம்-அதாவது கோவில்
நிர்ஜ்ஜனதேசம்-அதாவது ஜனமில்லாத இடம்
நாலுபுறமும் படுதாபோட்டு இருக்கவேண்டும்.
இதுபோன்ற இடத்தில் மருந்துசெய்ய மனதிடமாகும்

### கல்வங்களின் பேதங்கள்

கறுப்புக்கல்வம். இதில் மருந்து அரைத்தால் ஆரோக்கியமும் பலமும உண்டாகும்.

வெள்ளைகல்வம். இதில் பலம் குறைவாகும் மேலும் மருந்தின் பலத்தைப் போக்கடிக்கும். பச்சைகல்வம், மூன்று தோஷமும் சமமாகும்

சிவப்புக்கல்வம் மூன்று தோஷமும் ஜனிக்கும் மஞ்சள் கல்வம். வியாதியை உண்டு பண்ணும்

இவைகளையறிந்து ஔஷதம் செய்தால் நலமாகும் மருந்துயரைக்கும் மேற்கல்லைப் பிடித்துக்கொண்டு ஈசான்யமுகத்தி லுட்கார்ந்து (சர்வபரிபூரண தயாபரா) என்று தியானஞ் செய்துக்கொண்டு மருந்தை நீட்டவேண்டியது

### கஷாயம் குடிக்கும் பாத்திரங்களும் குடிக்கு முறையும்

பொன் வெள்ளி மண் இதில் செய்த பாத்திரங்களில் கஷாயம் வார்த்துக் சுடவுளாத்தியானித்துக் கொண்டு வியாதியஸ்தனுக்குக் கொடுக்கக் குடித்தவுடன் நாலுதுளி கீழ்விழும்படி பாத்திரத்தைக் கவிழ்க்க வேண்டும்.

### ரோகிகளுக்கு மருந்து கொடுக்கும் கால நிர்ணயம

அசாத்திய ரோகிகளுக்கு. உடனுக்குடன் கொடுக்க வேண்டும்.

சாதாரண ரோகிகளுக்கு. உதயத்திலும சாயந்திரத்திலும் கொடுக்க வேண்டியது.

பேதிவாந்தி ரோகிகளுக்கு. உதயத்தில் கொடுக்க வேண்டியது.

கலிகமிடுவதற்குச், சாயந்திர காலமே தக்கது.

### அக்கினி இலக்ஷணங்கள்

தீபாக்கினி இலக்ஷணம். ஒருசேர்தைலமென்



ருல் 8 பலம் எனப்படும் இதை ஓர்கலசத்தில் வார்த்து எள்ளுப்பிரமாணம்பஞ்சுவத்தி செய்து எரிக்க வேண்டும் இது இரண்டங்குலம் உயரமாயெரிக்க வேண்டும் இது போலவே கட்டையால் யெரிக்கத் தீபாக்கினி என்று சொல்லப்படும்.

கமலாக்கினி இலக்ஷணம், மேற் சொல்லிய அக்கினிபோலவே செய்து தாமரை மொக்கு போல ஆறு அங்குலம் உயரம் எரிக்க கமலாக்கினியென்று சொல்லப்படும்.

மந்தாக்கினி இலக்ஷணம், காட்டுக் கரியை நெருப்புச்செய்து வைப்பதுமந்தாக்கினி என்று சொல்லப்படும்.

கடாக்கினி இலக்ஷணம். அடுப்பு நிறைய வரட்டிகள் வைத்து மேற் பாத்திரத்துக்குக் கழுத்தளவு அக்கினி புகை வரும்படி எரிப்பது கடாக்கினியென்று சொல்லப்படும்,

### புடங்களிடும் விவரம்

மஹாபுடம், ஒரு கெஜமாழமும் அகலமுமாகப் பள்ளம் வெட்டிக் காட்டு வரட்டியினல் புடம்போடுவது மகாபுடமென்று சொல்லப்படும்.

கெஜபுடம், ஒன்றரை கெஜமாழமும் அகலமுமாகப் பள்ளம் வெட்டி புடம்போடுவது கெஜபுடமென்று சொல்லப்படும்.

வராஹபுடம். ஒருமுழமாழமும் அகலமுமாகப்பள்ளம் வெட்டிக் காட்டின் வரட்டி 100

சேர்த்து வைப்பது வராகபுடமென்று சொல்லப்படும்.

குக்கிடபுடம். ஒன்றே காற்ஜாணுழமும், ஒன்றேகாற்ஜாணகலமுமாகப் பள்ளம் வெட்டிக் காட்டுவரட்டி 50 சேர்த்துப் புடமிடுவது குக்கிடபுடமென்று சொல்லப்படும்.

கபோதபுடம். மேற் சொல்லிய குக்கிடபுடத்திற்கு போட்ட வரட்டியில் மூன்றில் இரண்டுபங்கால் போடுவது.

பண்ணி புடம், மூன்று வரட்டியினுல்வைக்கும் புடத்திற்கு பண்ணிபுடமென்று சொல்லப்படும். இதற்கு முக்கால்ஜாண் ஆழமும் அகலமும் பள்ளம் வெட்டி புடமிடவும்.

கோபுரபுடம். வரட்டியைச் சூரணம் செய்து பூமிமீதுகொட்டியதில் ஔஷதம் வைக்கும் கையால் அமிக்கி புடமிடுவது கோபுரபுடமென்று சொல்லப்படும்.

தீபப்புடம் கையடுப்பிற் கீழே தீபம் வைத்து அவியாமல்எரிகிறது தீபப்புடமென்று சொல்லப்படும்,

சூரியபுடம் மருந்துகளை பாத்திரத்திலிட்டு வெய்யிலில் வைப்பது சூரியபுடமென்று சொல்லப்படும்.

பூமிபுடம், சீலைசெய்து பாத்திரங்கள் பூமியிற் புதைத்து வைப்பது பூமிபுடமென்று சொல்லப்படும். இதற்கு ஒருமுழம் பள்ளம வெட்ட வேண்டியது.



தான்யபுடம், லேச்கியம் தைலம் இதைப் பக்குவமாய்ச் செய்து அதைச் சிலநாள் வரைக்கும் தான்யத்தில் வைத்திருப்பதற்குத் தான்யபுடமெனறு சொல்லப்படும்.

கும்பபுடம், ஒரு மண்குடத்தின் கீழ்ப்பாகத்தில சுமார் அங்குல பிரமாணம் 60-தொளை செய்து நிறைய நெற்கொட்டி மருந்து வைக்கும் வாய்ப்புறத்தை அகலால்மூடி சீலைசெய்து அகலிலும நெருப்பைப் போட்டு அடுப்பின் மீது வைத்துச் சிறிதாக எரிப்பது இதற்குக் கும்பபுடமென்று சொல்லப்படும்.

இரண்டாம் பாகம் முற்றிற்று.

## அட்டவணை.


| நெ. | பொருள் | பக்கம் | நெ | பொருள் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1 | தாதுபுஷ்டி சூரணம் | 3 | | மரித்திருந்தால் | 6 |
| 2 | கண்வியாதிகளுக்கு ஓர் தைலம் | 3 | 13 | நேத்திரகாசத்திற்கு | 6 |
| 3 | பயித்தியம் தீர | 3 | 14 | இருமலுக்கு வேறு முறை | 6 |
| 4 | இரத்த பிரமியநோய் தீர | 4 | 15 | தாதுபுஷ்டியுண்டாக | 7 |
| 5 | அதிசார பேதிக்கு | 4 | 16 | நீர் எரிவு நீங்க | 7 |
| 6 | சுட்டுக்கால் பூச்சிக் கடிக்கு | 4 | 17 | தேக உஷ்ணத்திற்கு | 7 |
| 7 | மார்பு வலிக்கு | 4 | 18 | கிராணி கழிச்சலுக்கு | 7 |
| 8 | ஈளை இருமலுக்கு | 5 | 19 | தலைவலிக்கு நசியம் | 8 |
| 9 | மூலவியாதிக்கு | 5 | 20 | இரத்தமூலத்திற்கு | 8 |
| 10 | பெருவியாதிக்கு | 5 | 21 | மேக கிரந்திக்கு | 8 |
| 11 | நீர்பீனிசம் நீங்க | 5 | 22 | கப இருமலுக்கு | 9 |
| 12 | குழந்தை வயிற்றில் | | 23 | பஸ்பம் | 9 |
| | | | 24 | பித்தசுரத்திற்கு கஷாயம் | 9 |

25 வெள்ளை வெட்டை வியாதிகளுக்கு 10
26 அதிமூத்திர வியாதிக்கு 10
27 நீர்கடுப்புக்கு பஸ்பம் 10
28 வயிற்று வலிக்கு பஸ்பம் 10
29 வெட்டை குட்டிற்கு பஸ்பம் 11
30 சகலவித இரணங்களுக்கு 11
31 குடல் நோய்களுக்கு 11
32 பிரசவமாவதற்கு 12
33 சொறி சிரங்குகளுக்கு 12
34 பித்தவாத சுரத்தற்கு கஷாயம் 12
35 வெள்ளை வெட்டைக்கு 12
36 சூலை நோய்தீர 12
37 கற்பசூலை நோய்களுக்கு 12
38 பேதியாவதற்கு 13
39 எலும்புருக்கி வியா 13
40 வயிறு உப்பிசம் நீங்க 13
41 விடாத தலைவலிக்கு 14
42 புத்திரசந்தானம் உண்டாக 14
43 காச இருமலுக்கு 14
44 எலிக்கடி விஷம்நீங்க 14
45 கெற்பமுண்டாவதற்கு 15
46 பித்த மயக்கத்திற்கு 15
47 நாள்பட்ட சுரத்திற்கு 15
48 தலைமயிர் உதிராமலிருப்பதற்கு 15
49 மார் எரிச்சலுக்கு 16
50 குழந்தைகளின் இரத்த வாந்திக்கு 16
51 குழந்தைகளின் வாந்திக்கு 16
52 நரம்பிழுப்பிற்கு 17
53 வெள்ளை கொருக்கு யோனி புத்திற்கு 17
54 பெண்களுக்கு அடிக்கடி பேதியாவதற்கு 17
55 நேத்திரம் துடித்தலுக்கு 18
56 நீர்கட்டி மலக்கட்டினால் உண்டாகும் வியாதிகளுக்கு 18
57 உஷ்ணபேதி அல்லது கழிச்சலுக்கு 19
58 உலர்ந்த ஸ்நானத் தைலம் 19
59 சிரங்குகளுக்கு 19
60 மூலிகைகளால் தீரும் வியாதிகளின் குணங்களின் விபரம் 20
61 இங்கிலீஷ் அளவு — இ°°து தமிழ் அளவு 50
62 ஆ°°து இங்கிலீஷ் அளவு 51
63 ஔஷதங்கள் செய்யுமிடங்களாவன 51
64 கல்வங்களின் பேதங்கள் 51
65 கஷாயம் குடிக்கும் பாத்திரங்களும் குடிக்கு முறையும் 52
66 ரோகிகளுமருந்து கொடுக்கும் காலநிர்ணயம் 52
67 அக்கினி இலக்ஷணங்கள் 53
68 புடங்களிடும் விபரம் 53


சீனிவாசா பிரஸ், சூளை சென்னை 7. (போன்: 35276)








டி. எஸ். சந்தானம்

டி. எஸ். கிருஷ்ண

...ஸ். ராஜம்